இராமதேவர் திருவாய் மலர்ந்தருளிய

# நிமித்தியகுறி சாஸ்திரம்

மூலமும் உரையும்



பிரசுரம் :

ஆனந்தபோதினி காரியாலயம்,

சென்னை—1.

1036

உ

கடவுள் துணை

இராமதேவர் திருவாய் மலர்ந்தருளிய

# நிமித்தியகுறி சாஸ்திரம்

## மூலமும் உரையும்

---

### விநாயகர் காப்பு

வெண்பா

காராரு மித்தரையோர் கண்டுகளி கூரநிதம்
ஏராரும் நிமித்யகுறி யியம்பவே—சீராருந்
துன்னுமறை வாணியருள் துலங்கவே யெந்நாளும்
கன்ன மதவாரணத்தான் காப்பு.

### நிமித்தியகுறி சாஸ்திரம் பார்க்கும் விவரம்

ஒவ்வொருவரும் கவனித்துப் பார்க்கவேண்டிய விதம் எவ்விதமெனில், இந்தப் புத்தகத்தில் அமைந்திருக்கும் அந்தந்த வாரங்களுக்குப் பகல் இரவுக் கேற்படுத்திய சக்கரங்களில் அடைந்திரா நின்ற நவக்கிரகங்களில் ஒன்றைத் தொடச்சொல்லி, அவரவர்கள் நினைத்த பலாபலன்களை அவரவர்கள் தொட்ட கிரகத்திற்குரிய பாடல்களை வாசித்து எளிதில் கண்டுரைக்கலாகும். அல்லது ஆரூடமாகக் கேட்க வந்தவர்களை ஒன்பதில் குறையக் கேட்டு அன்றைய தினம் என்ன வாரமோ அதையறிந்து அவர்கள் குறை சொன்னதைக் ஞாபகமாக வைத்து சூரியன் முதலாக வெண்ணிக் கொண்டு வருக. அவர்கள் சொன்னது எந்தக் கிரகமோ அந்த கிரகப் பாடலை வாசித்து குறித்துக் கேட்ட ஆரூடத்தை விவரமாகச் சொல்லலாம்.

### நூலின் பெருமை

அவரவர்கள் தங்கள் தங்கள் கருத்தில் நினைத்தவண்ணம் பலாபலன்களை எள்ளுக்காய்ப் பிளந்தாப்போல மனம் திருப்தியடைய கூறுகின்றமையால் இந்நூலிற்கு நிமித்யகுறி சாஸ்திர மென்று பெயர் அமைத்து யாவருக்கும் உபயோகமாகும் நோக்கோடு இந்நூல் வெளியிடப்பட்டது கவனிப்பீராகவும்.

## நான்முகம்

## ஞாயிற்றுக்கிழமை பகல் சக்கரம்

| | | |
|---|---|---|
| க<br>சூரியன் | உ<br>சந்திரன் | ௩<br>செவ்வா |
| ௪<br>புதன் | ரு<br>வியாழன் | ௬<br>சுக்கிரன் |
| எ<br>சனி | அ<br>இராகு | கூ<br>கேது |

### சூரியனைத் தொட்ட பலன்

கருதியே கதிரோன்வாரம் கதிரோனைத் தொட்டதாலே
உருதியா முத்தியோகத்தி லோங்கிய விருத்தியில்லை
அருதியாம் போனசொத்து அகப்பட நாளேசெல்லும்
பெருகிய வியாதியோடே பித்தமு மதிகமாமே

இதன்பொருள்: ஞாயிற்றுக்கிழமை பகல் சூரியனைத் தொட்டதால் செய்யும் உத்தியோகத்தில் லாபம் கிடைக்கமாட்டாது, கைவிட்டுப் போன சொத்து அகப்பட நாட்செல்லும், தேகத்தில் பிணியும் பித்தமும் அதிகரிக்கும். எ-று.

### சந்திரனைத் தொட்ட பலன்

ஆகவே கதிர்வாரத்தி லம்புலித்தனையே தொட்டால்
தாகமாய்ப் போனசொத்து தடையிலா வந்துசேரும்
பாகமாம் வழக்குவெல்லும் பலதொழில் பலிதமாகும்
போகவே பிரயாணத்தில் பொருளது வருகும்பாரே.

இ-ள். ஞாயிற்றுக்கிழமை பகல் சந்திரனைத் தொட்டதால் மனஸ்தாபத்தினுல் போன சொத்து வந்து சேரும், எடுத்த வழக்கு வெல்லும், செய்யும்படியான பலவிதத் தொழிலும் பலிதமாகும், பிரயாணஞ்செய்ய நன்மையுண்டாம், பொருள் கிடைக்கும் எ-று. 2

### செவ்வாயைத் தொட்ட பலன்

பார்க்கவே கதிர்வாரத்தி லாரலைத் தொட்டதாலே
மூர்க்கமாம் ஸ்திரீயினுலே மூண்டதோர் கலகந்தா[illegible]

வேர்க்கவே வினையுமாகும் வேந்தரால் பயங்கள்நேரும்
கோர்க்கவே யொருவனாலே குற்றமும் நேருங்காணே.

இ-ள். ஞாயிற்றுக்கிழமை பகல் செவ்வாயைத் தொட்டதால் ஒரு ஸ்திரீயினால் கலகம் நேர்ந்து அதனால் ராஜபயம் நேரும், ஒரு சினேகனால் குற்றமாகும் எ-று. 3

### புதனைத் தொட்ட பலன்

காணவே கதிர்வாரத்தில் கணக்கனைத் தொட்டதாலே
வேணவே நன்மையுண்டாம் வெகுதூரம்போனார்மீள்வர்
பூணவே பொன்னுமுண்டாம் பேசிய பெண்கிடைக்கும்
தோணவே தொடுத்தவேளை துரிதமாய் முடியுங்கூறே.

இ-ள். ஞாயிற்றுக்கிழமை பகல் புதனைத் தொட்டதால் நன்மையுண்டாகும், தூரதேசம் போனவர் வந்து சேர்வார்கள் பொன் கிடைக்கும், பேசியிருக்கும்படியான பெண் கிடைக்கும். நினைத்த காரியம் முடியும் எ-று. 4

### வியாழனைத் தொட்ட பலன்

கூறவே கதிர்வாரத்தில் குருதனைத் தொட்டதாலே
மீறிய மழையுமுண்டாம் மிக்கதோர் விளைவுமுண்டாம்
சீரிய பகைவர்தானும் சேர்ந்துற வாடுவார்கள்
காரிய மாகுஞ்சித்தி களிப்புறச் சுகமுமுண்டே.

இ-ள். ஞாயிற்றுக்கிழமை பகல் வியாழனைத் தொட்டதால் மழையுண்டு, விளைவுண்டு. பகைவர் உறவாவார்கள். நினைத்த காரியம் சித்தியாகும் எ-று. 5

### சுக்கிரனைத் தொட்ட பலன்

சுகமெனக் கதிர்வாரத்தில் சுக்கிரனைத் தொட்டதாலே
அகமதில் நினைத்தவண்ணம் ஆகிடுங் கலியாணந்தான்
உகமையாய் சினேகனாலே உறுதியாய் காரியங்கள்
ஜெகமதில் நாளுக்கே நாள் சித்தியா மென்று சாத்தே.

இ-ள். ஞாயிற்றுக்கிழமை பகல் சுக்கரனைத் தொட்டதால் மனதில் நினைத்தவண்ணம் கலியாணங்கூடும், சினேகத்தினால் காரியம் அனுகூலமாகும், இவையெல்லாம் நாளுக்குநாள் சித்தி யாகும் எ-று. 6

### சனியனைத் தொட்ட பலன்

சாத்தவே கதிர்வாரத்தில் சனியனைத் தொட்டதாலே
தோத்ததோர் பொருள்வாராது துணைவரால் கலகமாகும்

காத்திர மாகக்கொண்ட கருத்தது முடிந்திடாது
ஆத்திரப் படவேவேண்டா மாயனை பூசைசெய்யே.

இ-ள். ஞாயிற்றுக்கிழமை பகல் சனியனைத் தொட்டதால் கைவிட்டுப் போனபொருள் கிட்டாது. துணைவர்களால் கலகம் நேரும். இப்போது முக்கியமாக மனதிற்கொண்ட கருத்து முடியாது, ஆத்திரப்படவேண்டாம், ஆயனைப் பூசைசெய்யும் எ-று 7

இராகுவைத் தொட்ட பலன்

செய்யவே கதிர்வாரத்தில் இராகுவைத் தொட்டதாலே
ஐயமாம் நினைத்தவேலை யாகாது தடையதாகும்
பையவே சத்துருவாலே பயமது மிகவுண்டாகும்
துய்யவே தொழில்தானுந் துயரமே விளையும்பாரே.

இ-ள். ஞாயிற்றுக்கிழமை பகல் இராகுவைத் தொட்டதால் நினைத்தவேலை முடியாது. சத்துருக்களால் கலகம் நேரும். தொழில் முகாந்திரத்தில் துயரமும் மனஸ்தாபமு முண்டாகும் எ-று. 8

கேதுவைத் தொட்ட பலன்

பாரென கதிர்வாரத்திற் கேதுவைத் தொட்டதாலே
கூரென வுனக்குமிப்போ கொடுமையாய் கெட்டவேளை
சிறிய பகைவராலே சிந்தையும் வாடுகின்றாய்
நேரென விவைகளெல்லாம் நடந்துபின் சுகமுண்டாமே.

இ-ள். ஞாயிற்றுக்கிழமை பகல் கேதுவைத் தொட்டதால் உனக்கு இப்போது கொடுமையாகிய கெட்டவேளையா யிருக்கின்றது. பகைவர்களாலே சிந்தை வாடுகின்றாய், இவைகள் நடந்து பின் சுகமுண்டாகும் எ-று. 9

## ஞாயிற்றுக்கிழமை இரவு சக்கரம்

| | | |
|---|---|---|
| க<br>சூரியன் | உ<br>சந்திரன் | ௩<br>செவ்வா |
| ச<br>புதன் | ரு<br>வியாழன் | சு<br>சுக்கிரன் |
| எ<br>சனி | அ<br>இராகு | க<br>கேது |

சூரியனைத் தொட்ட பலன்

உண்டெனக் கதிர்வாரத்தில் உற்றிடு மிரவுதன்னில்
கண்டிடக் கதிரோன் றன்னைக் கருதியே தொட்டதாலே
பண்டனெக் கீர்த்தியுண்டாம் பலுகிடு முத்தியோகம்
உண்டெனத் தந்தையாலே யுதவியா மென்றுபேசே.

இ-ள். ஞாயிற்றுக்கிழமை இரவில் சூரியனைத் தொட்டதால் கீர்த்தியானது பெருகும், உத்தியோகங் கிடைக்கும், தந்தையால் செல்வமுண்டாகும், நினைத்த காரியங் கைகூடும் எ-று. 10

சந்திரனைத் தொட்ட பலன்

பேசிடுங் கதிர்வாரத்தில் பெருகிய யிரவுதன்னில்
நேசமாய் சந்திரன் றன்னை நெருங்கியே தொட்டதாலே
பாசமாந் தாயினாலே பலனது மிகவுண்டாகும்
வாசமாய் பந்துவெல்லாம் வாகுட னுறவதாவர்.

இ-ள். ஞாயிற்றுக்கிழமை இரவு சந்திரனைத் தொட்டதால் சுக முண்டாகும், தன்னுடைய தாயாரினால் நன்மையானது பெருகும்; தாமதமில்லாமல் நினைத்துப் போகிற வேலை முடியும் எ-று. 11

செவ்வாயைத் தொட்ட பலன்

ஆகவே கதிர்வாரத்தில் அடுக்குமோ ரிரவு தன்னில்
பாகமாய் செவ்வாய்தன்னைப் பரிவுடன் தொட்டதாலே
தாகமு மினிமேலில்லை தழைக்கவே போனார் மீள்வர்
ஈகவே யெடுத்தவேலை யெழிலுடன் பலிக்கும் நன்றே

இ-ள். ஞாயிற்றுக்கிழமை இரவு செவ்வாயைத் தொட்டதால் உன்னுடைய சகோதரர்கள் பொல்லாப்பாய் போனவர்கள் உறவாக வந்து சேர்வார்கள். ஸ்திரீயால் நேர்ந்த கலகம் தீரும் எ-று. 12

புதனைத் தொட்ட பலன்

நன்றெனக் கதிர்வாரத்தில் நண்ணிடு மிரவுதன்னில்
வென்றிடும் புதனைத்தானும் விரும்பியே தொட்டதாலே
குன்றிடா வித்தையோங்குங் குறைவிலா தனமுஞ் சே[ரும்
கன்றுடன் காலிதானுங் களவுபோ னதுவுங்கிட்டும்.

இ-ள். ஞாயிற்றுக்கிழமை இரவு புதனைத் தொட்டதால் வித்தை பலிதமாகும்; குறைவில்லாமல் தனம் வந்து சேரும்; கன்று காலி களவாகப் போனதுவும் வந்து சேரும் எ-று. 13

### வியாழனைத் தொட்ட பலன்

கிட்டவே கதிர்வாரத்தில் கிட்டிய யிரவுதன்னில் [தாலே
பொட்டெனப் பொன்னேன் றன்னைப் புகழுடன் தொட்ட
திட்டமாய்மனையாள் தானுந்திறமுடன் பெறுவாள்பிள்ளை
மட்டிலாப் போனவேலை மனம்போல முடியுங்காணே.

இ-ள். ஞாயிற்றுக்கிழமை இரவு வியாழனைத் தொட்டதால் மனையாள் ஆண்பிள்ளை பெறுவாள்; நீ நினைத்துப் போகிற வேலை பலிதமாகும். எ-று. 14

### சுக்கிரனைத் தொட்ட பலன்

காணவே கதிர்வாரத்திற் கண்டிடு மிரவுதன்னில்
வேணவே சுக்கிரன் றன்னை வேண்டியே தொட்டதாலே
பூணவே வழக்குவெல்லும் போனவர் வந்துசேர்வர்
தோணவே நினைத்ததெல்லாம் துலங்கிடப்பலனுண்டாமே

இ-ள். ஞாயிற்றுக்கிழமை இரவு சுக்கிரனைத் தொட்டதால் பழையநாள் வழக்குவெல்லும். தூரதேசம் போனவர் வந்து சேர்வார்கள், நினைத்த வேலை யாவும் தடையின்றிப் பலிதமாகும் எ-று. 15

### சனியைத் தொட்ட பலன்

ஆகவே கதிர்வாரத்தில் அறையுமோ ரிரவுதன்னில்
பாகமாய்ச் சனியைத்தானும் பரிவுடன் தொட்டதாலே
தாகமாங் கலகத்தாலே தனமது சேதமுண்டாம்
ஏகவே போனசொத்து இனிவரா தென்றுபேசே.

இ-ள். ஞாயிற்றுக்கிழமை இரவு சனியைத் தொட்டதால் தாகமாகிய கலகத்தினுல் பொருள் சேதமாகப் போகும், கைவிட்டுப் போன சொத்து வந்து சேர்வது கஷ்டமாகும் எ-று. 16

### இராகுவைத் தொட்ட பலன்

பேசிடுங் கதிர்வாரத்தில் பொல்லாத இரவுதன்னில்
கூசிய ராகுதன்னைக் கொப்பெனத் தொட்டதாலே
வாசமாய் நினைத்தவேலை வருத்தமாம் முடிந்திடாது
தோஷமாய் மெய்பிற்றானுந் தோன்றிய பிணியுமுண்டே

இ-ள். ஞாயிற்றுக்கிழமை இரவு இராகுவைத் தொட்டதால் நினைத்த வேலை வருத்தஞ் செய்யுங் கூடிவராது, தோஷமாகத் தானே தேகத்தில் பிணியினுல் பாதையுண்டாகும் எ-று. 17

### கேதுவைத் தொட்ட பலன்

உண்டெனக் கதிர்வாரத்தில் ஓங்கிய யிரவுதன்னில்
கண்டிடக் கேதுதன்னைக் கருதியே தொட்டாலும்

பண்டெனப் பகைவராலே பயமது வுண்டுகண்டாய்
வண்டெனப் போனவேலை வருத்தமே செய்யும்பாரே.

இ-ள். ஞாயிற்றுக்கிழமை இரவு கேதுவைத் தொட்டதால் பகைவர்களால் பயம் நேரும், அதனல் மனவருத்த முண்டாகும், இப்போது குறித்துப் போகிற வேலையிலும் வருத்தமான வாக்குண்டாகும் எ-று. 18

## திங்கட்கிழமை பகல் சக்கரம்

| | | |
|---|---|---|
| உ<br>சந்திரன் | ௬<br>செவ்வா | ௪<br>புதன் |
| ௫<br>வியாழன் | ௬<br>சுக்கிரன் | எ<br>சனி |
| அ<br>இராகு | ௯<br>கேது | க<br>சூரியன் |

### திங்கட்கிழமை சந்திரனைத் தொட்ட பலன்

தானென இந்துவாரம் சந்திரனைத் தொட்டதாலே
மானென மனையிற்செல்வம் மங்கையும் பெறுவாள்பிள்ளை
ஊனமாம் வழக்குவெல்லு முற்றதுஞ் சித்தியாகும்
தேனெனப் பிணியுந்தீரும் தீங்கது இல்லைபாரே.

இ-ள். திங்கட்கிழமை பகல் சந்திரனைத் தொட்டதால் செல்வம் பெருகும், மனையாள் ஆண்பிள்ளை பெறுவள், வழக்கு வெல்லும், நினைத்த காரியஞ் சித்தியாகும், நோய்தீரும் தீமையொழியும் எ-று. 19

### செவ்வாயைத் தொட்ட பலன்

பாரென இந்துவாரம் ஆறலைத் தொட்டதாலே
காரெனக் கன்னியாலே கவலையுங் கலகமுண்டு
நேரென வொருவனாலே நிந்தையாம் வழக்குமாகும்
கூறென சகோதரர்க்குக் குற்றமும் பிணியுண்டாமே.

இ-ள். திங்கட்கிழமை பகல் செவ்வாயைத் தொட்டதால் ஒரு ஸ்திரீயினல் கவலையாகிய கலகமுண்டு, ஒரு சினேகிதனல்

கிந்தை யாகிய வழக்குண்டாகும், தன்னுடைய சகோதரர்க்கு பிணி காட்டும். எ-று. 20

புதனைத் தொட்ட பலன்

உண்டென இந்துவாரம் புந்தியைத் தொட்டதாலே
பண்டென வழக்குதீரும் பலித்திடும் நினைத்தவேலை
உண்டென வொருவர்தம்மை யுற்றதால் வழக்குமுண்டு
கண்டதோர் கனவின்வாறு காட்சியாய் பலிக்கும்பாரே

இ-ள். திங்கட்கிழமை பகல் புதனைத் தொட்டதால் பழமையாகிய வழக்குத் தீரும், நினைத்த வேலை முடியும், ஒருவரை அடுத்திருக்கிறாய் அவர்களால் சுபகாரியம் முடியும், கண்ட கனவின் வாறு பலிதமாகும் நினைத்தவை முடியும் எ-று. 21

வியாழனைத் தொட்ட பலன்

பார்க்கவே யிந்துவாரம் பார்ப்பனைத் தொட்டதாலே
ஏர்க்கவே நினைத்தவேலை யிட்சணம் பலிதமாகும்
கார்க்கவே குலதெய்வத்தை கருத்தினில் நினைப்பாய் [நாளும்
பூர்க்கவே புகழுமுண்டாம் போனதோர் பொருளுங் [காணும்

இ-ள். திங்கட்கிழமை பகல் வியாழனைத் தொட்டதால் நினைத்த வேலை உடனே பலிதமாகும், உன்னுடைய குலதெய்வத்தை மறவாமல் பூசை செய்துகொண்டுவா, புகழுண்டாகும், போன பொருள் வந்து சேரும் எ-று. 22

சுக்கிரனைத் தொட்ட பலன்

காணவே யிந்துவாரஞ் சுக்கிரனைத் தொட்டதாலே
பூணவே வதுவைகூடும் பெண்ணவள் சொந்தமாகும்
தோணவே தூரம்போனர் துரிதமாய் வந்துசேர்வர்
வேணவே யுதவியோக வெற்றியுந் தானுண்டாமே.

இ-ள். திங்கட்கிழமை பகல் சுக்கிரனைத் தொட்டதால் கலியாணமாகும், சொந்தத்தில் பெண் கிடைக்கும். வெகுதூரம் போயிருக்கிறவர் சீக்கிரமாக வந்து சேர்வார்கள். எதிரியை வென்று ஜெயமடைவாய் எ-று. 23

சனியைத் தொட்ட பலன்

ஆமென இந்துவாரம் முடவனைத் தொட்டதாலே
தாமென நினைத்தவேலை தடையாகும் பலிதமில்லை
போமென மெய்பிற்கண்ட பிணிதீர் நாளதாகும்
காமென வழக்கினேடு நஷ்டம தாகுமென்னே

இ-ள். திங்கட்கிழமை பகல் சனியைத் தொட்டதால் நினைத்த வேலை தடையாகும். பலிதமில்லை, தேகத்தினிடமாக வாய்த்த பிணி தீர நாள் செல்லும், வழக்குண்டாகும், நஷ்டமாகும். எ-று. 24

### இராகுவைத் தொட்ட பலன்

என்னவே இந்துவாம் இராகுவைத் தொட்டதாலே
மன்னிய கலகமுண்டு மனையில் பொருளுஞ்சேதம்
உன்னிய உத்தியோகத்தில் ஒருவனால் கலகமாகும்
பன்னியபழையநாள்நேசம் பகரொணுப்பகையேகாட்டும்.

இ-ள். திங்கட்கிழமையில் பகல் இராகுவைத் தொட்டதால் கலகமானது நேர்ந்து அதனால் பொருள் சேதமாகும், செய்யும்படியான உத்தியோகத்தில் ஒருவனால் கலகமாகும், பழைய நாள் சிநேகம் கொடுமையாகிப் பகையாகும். எ-று. 25

### கேதுவைத் தொட்ட பலன்

காட்டவே இந்துவாரம் கேதுவைத் தொட்டதாலே
நாட்டினில் மழையுமில்லை நண்ணிய கருமமாகா
பூட்டமாய் வந்த நோயும் போகவே நாளதாகும்
சூட்டிய சிநேகனாலே சுகமில்லை யென்று பேசே.

இ-ள். திங்கட்கிழமை பகல் கேதுவைத் தொட்டதால் மழையில்லை, நினைத்தகாரியம் மத்திபமாகும், தேகத்தில் வாய்ந்த பிணி தீர நாள் செல்லும், ஒரு சிநேகனை நம்பியிருக்கிறாய் அவனால் சுகமில்லை. எ-று. 26

### சூரியனைத் தொட்ட பலன்

பேசவே இந்துவாரம் பரிதியைத் தொட்டதாலே
தோஷமுந் துலைந்துபோகும் துணைவரால் நன்மையுண்டு
வாசமாய்ப் பேசிக்கொண்ட வார்த்தையு முடிவதாகும்
நேசமும் வந்துகூடும் நிச்சய மிதுதப்பாதே.

இ-ள். திங்கட்கிழமை பகல் சூரியனைத் தொட்டதால் தோஷமானது தொலைந்துபோகும், துணைவர்களினால் நன்மையுண்டாகும். ஆந்திரிகமாய்ப் பேசிக்கொண்ட பேச்சு முடியும், சிநேகங் கைகூடும். எ-று. 27

## திங்கட்கிழமை இரவு சக்கரம்

| | | |
|---|---|---|
| ௨ சந்திரன் | ௯ செவ்வா | ௪ புதன் |
| ௩ வியாழன் | ௫ சுக்கிரன் | ௭ சனி |
| ௮ இராகு | ௧ கேது | ௬ சூரியன் |

### சந்திரனைத் தொட்ட பலன்

தப்பிலா சோமவாரம் தானெனு மிரவுதன்னில்
ஒப்பிலா சந்திரன் றன்னை யுகந்துமே தொட்டதாலே
மெய்யுடன் நினைத்தவேலை மத்திபம் பின்னலாகும்.
தெப்பெனப் போனஜீவன் தென்மேற்கு மூலைகாண்பாய்

இ-ள். திங்கட்கிழமை இரவு சந்திரனைத் தொட்டதால் நினைத்த வேலை மத்திபம், பின்னலாகும், அன்றியு மிப்போது ஒரு ஜீவன் வெளிதாண்டிப் போயிருக்கிறது. அது தென் மேற்கு மூலையாகப் போய்ப் பார்க்கக் கிடைக்கும் எ-று. 28

### செவ்வாயைத் தொட்ட பலன்

பாயெனச் சோமவாரம் பருகிய இரவு தன்னில்
சேயதைத் தொட்டதாலே சிந்தனை படுகின்றாய் நீ
மாயவே மங்கையாலே மாறாத துக்கமுண்டு
தோயவே துணைவனாலே தொல்லையும் விளையும்பாரே.

இ-ள். திங்கட்கிழமை இரவு செவ்வாயைத் தொட்டதால் மன தில் சிந்தனைப்படுகிறாய். அது யாராலென்றால் ஒரு ஸ்திரீயினால் தீராத துக்கப்படுகிறாய், அதுவுமல்லாமல் தமையன் தம்பிகளா லும் தொல்லைப்படுகிறாய் எ-று. 29

### புதனைத் தொட்ட பலன்

பார்க்கவே சோமவாரம் பாரிருள் தன்னிலேதான்
ஏர்க்கவே புந்திதன்னை யிஷ்டமாய்த் தொட்டதாலே

தீர்க்கமாய் நினைத்தவேலை திங்களில் பலிதமாகும்
மூர்க்கமா யெதிர்த்தோரெல்லா மிகுந்துற வாகுவாரே.

இ-ள். திங்கட்கிழமை இரவு புதனைத் தொட்டதால் இப்போது நினைத்தவேலை ஒரு மாதத்தில் முடியும், உன்னுடன் மூர்க்கமாக எதிர்த்தவர்களெல்லாம் இப்போது உறவாக வந்து கூடுவார்கள் எ-று. 30

வியாழனைத் தொட்ட பலன்

வாரென சோமவாரம் வருமொரு இரவுதன்னில்
சீரெனப் பொன்னேன் றன்னைச் சிறப்புடன் தொட்ட [தாலே
கூரென விளைவுமுண்டாங் கோதையர் வழக்குத்தீரும்
மீரென லாபமுண்டாம் மங்கைய ருறவுங்கூடும்

இ-ள். திங்கட்கிழமை இரவு வியாழனைத் தொட்டதால் விளைவுண்டாகும், ஸ்திரீயினால் நேர்ந்த வழக்குத் தீரும், செய்யும் படியான தொழிலில் லாபங் கிடைக்கும். மங்கையர்களின் உறவு கூடும், நன்மை யுண்டாகும் எ-று. 31

சுக்கிரனைத் தொட்ட பலன்

கூடிய சோமவாரம் குலவிய இரவுதன்னில்
தூரென முடவன்றன்னைத் திறமுடன் தொட்டதாலே
நாடிய பொருள்கைக்கூடும் நங்கைய ருறவுமாகும்.
வாடிய மனமுந்தேறும் வதுவையு மாகுஞ்சீரே.

இ-ள். திங்கட்கிழமை இரவு சுக்கிரனைத் தொட்டதால் நாடியிருக்கும்படியான பொருள் கைக்கூடும், ஸ்திரீகளின் உறவுகூடும் வாடியிருக்கும்படியான மனந்தேறும், கலியாணங்கூடும் எ-று. 32

சனியைத் தொட்ட பலன்

சீரென சோமவாரம் சூழ்ந்திடு மிரவுதன்னில்
தூரென முடவன்றன்னைத் தோஷமாய்த்தொட்டதாலே
கூரென வழக்கினாலே கொடுமையாம் பயமதாகும்
காரென விலங்குமுண்டாம் கைப்பொருள் விரையமாமே.

இ-ள். திங்கட்கிழமை இரவு சனியைத் தொட்டதால் ஒரு வழக்கினால் பெருத்த பயம் நேரும், அதனால் விலங்கு பூணும்படியாகச் செய்யும். கைப்பொருள விரையமாகும், அதனால் மன வருத்தமுண்டாம் எ-று. 33

### இராகுவைத் தொட்ட பலன்

விரையென சோமவாரம் விளங்கிய இரவுதன்னில்
குரையென யிராகுதன்னை-குறியெனத் தொட்டதாலே
சிறையது படவேசெய்யும் செய்தொழில் நஷ்டமாகும்
தரையினி லச்சங்கொண்டு தானுமே வாழச்செய்யும்.

இ-ள். திங்கட்கிழமை இரவு இராகுவைத் தொட்டதால் சிறைப்படச் செய்யும், செய்யுந் தொழிலில் நஷ்டமாகும், உலகத்தில் அச்சப்பட்டு வாழ்க்கை செய்யும்படி சம்பவிக்கும் எ-று. 34

### கேதுவைத் தொட்ட பலன்

விரையென சோமவாரம் செப்பிடு மிரவுதன்னில்
ஐயமாய்க் கேதுதன்னை அறியவே தொட்டதாலே
பையவே குறித்தோனுக்குப் பயித்திய ரோகமுண்டாம்
தொய்யவே யதினல்பாதை தோஷம தாகும்பாரே.

இ-ள். திங்கட்கிழமையில் இரவு கேதுவைத் தொட்டதால் குறித்துக் கேட்டவனுக்குப் பயித்திய ரோகமுண்டாம், அதினல் பாதையுண்டாம் எ-று. 35

### சூரியனைத் தொட்ட பலன்

பாரென சோமவாரம் பரவிய இரவுதன்னில்
காரெனக் கதிரோன்றன்னைக் களிப்புடன் தொட்டதா[லே
சீரென சிறையும் நீங்கும் செய்தொழில் பலிதமாகும்
நேரென வொருவராலே நல்லுபகாரம் பாரே.

### செவ்வாய்க்கிழமை பகல் சக்கரம்

| | | |
|---|---|---|
| க<br>செவ்வா | ௪<br>புதன் | ௫<br>வியாழன் |
| ௬<br>சுக்ரோன் | ௭<br>சனி | ௮<br>இராகு |
| ௯<br>கேது | ௩<br>சூரியன் | ௨<br>சந்திரன் |

### செவ்வாயைத் தொட்ட பலன்

பார்க்கவே யாரல்வாரம் யாறலைத் தொட்டதாலே
ஏர்க்கவே யாண்பால் ஜீவன் யேகியே போனதுண்டு
கோர்க்கவே வாய்வுமூலை குறித்திடுங் காதத்திற்குள்
பூர்க்கவே போய்தான் பார்க்கப் பொருளது சித்தியாமே

இ-ள். செவ்வாய்க்கிழமை பகல் செவ்வாயைத் தோட்டத்தால் ஒரு ஆண்பால் ஜீவன் வெளிதாண்டிப் போனதுண்டு, அதை வட மேற்கு மூலையாகப் போய்ப் பார்க்க அகப்படும், ஆனால் ஒரு காத வழிக்குள் காணலாம் எ-று. 37

### புதனைத் தொட்ட பலன்

யாமென யாரல்வாரம் புந்தியைத் தொட்டதாலே
தாமென மனையிற்செல்வம் தழைத்திடும் நினைத்தவேலை
நாமென வொருவராலே நல்லுப காரமாகும்
போமென போனசொத்து புகழுடன் வந்துகூடும்.

இ-ள் செவ்வாய்க்கிழமையில் புதனைத் தொட்டதால் மனையில் செல்வமானது ஓங்கும், நினைத்தவேலை பலிதமாகும், ஒரு சினேகனால் நல்ல உபகாரமாகும், கைவிட்டுப்போன சொத்து வந்து சேரும். எ-று. 38

### வியாழனைத் தொட்ட பலன்

கூறவே யாரல்வாரம் குருவையுந் தொட்டதாலே
பேறென வதுவைகூடும் புத்திர பாக்கியமுண்டு,
கோரிய வழக்குவெல்லும் கூட்டுவியா பாரமோங்கும்
பாரிய மனிஷராலே பரவிய வுதவியுண்டாம்.

இ-ள். செவ்வாய்க்கிழமை பகல் வியாழனைத் தொட்டதால் கலியாணங்கூடும், புத்திரபாக்கிய முண்டாகும், தொடுத்திருக்கும் படியான வழக்கு வெல்லும், கூட்டு வியாபாரத்தில் தனங் கிடைக்கும், ஒரு பெரிய மனுஷரால் உதவி யுண்டாகும் எ-று 39

### சுக்கிரனைத் தொட்ட பலன்

உண்டென யாரல்வாரம் சுக்கிரனைத் தொட்டதாலே
கண்டிட மனையில் தானுங் கனத்ததோர் புதையல்காணும்
கொண்டதோர் மனைவியாளாலே குலமது விருத்தியாகும்
பண்டுள பந்துவெல்லாம் பட்சம தாகுவாரே.

இ-ள். செவ்வாய்க்கிழமை பகல் சுக்கிரனைத் தொட்டதால் மனையில் புதையல் கண்டு எடுப்பாய். மனையாளினால் குலம் விருத்தியாகும், பந்துக்களெல்லாம் பட்சமுடன் உறவாவார்கள் எ-று. 40

சனியைத் தொட்ட பலன்

வாரென யாரல்வாரம் முடவனைத் தொட்டதாலே
பாரெனப் பயமுமுண்டு பலியாது நினைத்தவேலை
கூரெனப் போனஜீவன் குற்றமாந் திரும்பிடாது
காரென மனதில்மெத்த கவலையு மாகுஞ்சொல்லே.

இ-ள். செவ்வாய்க்கிழமை பகல் சனியைத் தொட்டதால் பய முண்டாகும், நினைத்தவேலை பலியாது, போனஜீவன் திரும்பி வரமாட்டாது, அதனால் மனக்கவலை யுண்டாம் எ-று. 41

இராகுவைத் தொட்ட பலன்

சொல்லவே யாரல்வார மிராகுவைத் தோட்டதாலே
புல்லவே விடிந்தால் பீடை பொல்லாத நோயாற் பீடை
அல்லலாய் வாய்த்துமல்லோ யவதியும் படுகிறாய் நீ
தொல்லையா மிவைகள் தீரத் திங்களொன் றாகும்பாரே.

இ-ள். செவ்வாய்க்கிழமை பகல் கேதுவைத் தொட்டதால் விஷ பீடையும், வியாதியால் துன்பமும் படுகிறாய், அவை தீர ஒரு மாதமாகும் எ-று. 42

கேதுவைத் தொட்ட பலன்

பார்த்திட யாரல்வாரம் கேதுவைத் தொட்டதாலே
தோர்த்திட போன சொத்து திரும்பியும் வாரதில்லை
கார்த்திட வொருவனாலே கலகமும் நேருதிப்போ
பேர்த்திட யவன்றன்நேசம் பிரிந்திட வாகும்நன்மை.

இ-ள். செவ்வாய்க்கிழமை பகல் கேதுவைத் தொட்டதால் போன பொருளும் மனிதரும் வந்து சேரமாட்டார்கள். ஒரு மனிதனால் கலகம் நேர்ந்து வருகின்றது, அவனுடைய நேசத்தை விட்டு விடவும் எ-று, 43

சூரியனைத் தொட்ட பலன்

நன்மையா மாரல்வாரம் நற்கதிர்தனைத் தொட்டதாலே
தன்மையாய் நினைத்தவேலை தடையது பட்டுவாகும்
உண்மையா யொருவர்சொன்ன யுத்தேச முடிந்திடாது
கன்மமும் நாளுக்குநாள் களிப்புறத் தொலைந்துபோமே.

இ-ள். செவ்வாய்க்கிழமை பகல் சூரியனைத் தொட்டதால் நினைத்த வேலை முன் தடைப்பட்டுப் பின்னால் முடியும். ஒருவரோடு பேசிய உத்தேசம் இப்போது முடியாது, ஆனால் இவைகள் நாளுக்கு நாள் அனுகூலப்படும். எ-று 44

சந்திரனைத் தொட்ட பலன்

போமென யாரல்வாரம் சோமனைத் தொட்டதாலே
தாமென நினைத்தவேலை தடையிலா தாகுமேன்மை
நாமென ஒருவராலே நலம்பெறக் கீர்த்தியாகும்
காமென நினைத்த கன்னிக் கைவசப் படுவாள்தானே.

இ-ள். செவ்வாய்க்கிழமை பகல் சந்திரனைத் தொட்டதால் நினைத்த காரியம் தடையில்லாமல் சித்தியாகும், ஒரு பெரிய மனுஷரால் நலம் பெறத் தக்க கீர்த்தியும் மேன்மையு முண்டாகும், நீ வெகு நாளாக நினைத்திருக்கும் கன்னியானவள் கைவசப் படுவாள் எ-று. 45

## செவ்வாய்க்கிழமை இரவு சக்கரம்

| | | |
|---|---|---|
| ௯ செவ்வா | ௪ புதன் | ௫ வியாழன். |
| ௬ சுக்கிரன் | ௭ சனி | ௮ இராகு |
| ௧ கேது | ௨ சூரியன் | ௨ சந்திரன் |

செவ்வாயைத் தொட்ட பலன்

தானெனச் சேயின்வாரம் தான்வரு மிரவுதன்னில்
தேனெனச் செவ்வாய்தன்னைத் தேடியே தொட்டதாலே
ஊனென நினைத்தவேலை ஒருகாலும் பலித்திடாது
நானென போனஜீவன் நங்கையர் வசமதாச்சே.

இ-ள். செவ்வாய்க்கிழமை இரவு செவ்வாயைத் தொட்டதால் நினைத்த காரியம் ஒருகாலு முடியாது, மனையை விட்டுப் போன ஜீவன் ஒரு ஸ்திரீவசமாகப் போச்சு எ-று. 46

### புதனைத் தொட்ட பலன்

ஆச்செனச் சேயின்வாரம் அறையுமோ ரிரவுதன்னில்
போச்செனப் புந்திதன்னைப் புகழுடன் தொட்டதாலே
கூச்சமு மொன்றுமில்லை கூடிடும் நினைத்தவேலை
பேசெனப் பிணியுந்திரும் புகழுறு மென்றுவோதே

இ-ள். செவ்வாய்க்கிழமை இரவு புதனைத் தொட்டதால் கூச்சமில்லாமல் நினைத்த வேலை கைக்கூடி வரும், பிணிதீரும் புகழுண்டாகும் எ-று. 47

### வியாழனைத் தொட்ட பலன்

ஒதவே சேயின்வாரம் உற்றதோ ரிரவுதன்னில்
போதவே பொன்னேன்றன்னைப் புகழுடன் தொட்ட
[தாலே
யோதவே வெளியூர்போனார் எழிலுடன் வந்துசேர்வர்
மாதவள் பெறுவாள் பிள்ளை மனதினில் நினைத்ததாகும்.

இ-ள். செவ்வாய்க்கிழமை இரவு வியாழனைத் தொட்டதால் வெளியூர் போனவர் வந்து சேர்வார்கள், மனையாள் ஆண்பிள்ளை பெறுவாள், நினைத்தவை கூடும் எ-று. 48

### சுக்கிரனைத் தொட்ட பலன்

ஆகவே சேயின்வாரம் அடருமோ ரிரவுதன்னில்
பாகமாய்ப் பளிங்குதன்னைப் பரிவுடன் தொட்டதாலே
தாகமா யாணும்பெண்ணுந் தான்கூடிப் போனதுண்டு
சோகமா யவர்கள்வந்து சேர்நா ளாகும்பாரே.

இ-ள். செவ்வாய்க்கிழமை இரவு சுக்கிரனைத் தொட்டதால் இப்போது ஒரு ஆண்பிள்ளையும் ஒரு பெண்பிள்ளையுங்கூடி வெளியூர் போனதுண்டு, அவர்கள் சோகப்பட்டு இருக்கின்றார் கள், அவர்கள் வர நாளாகும் எ-று. 49

### சனியைத் தொட்ட பலன்

பாரெனச் சேயின்வாரம் பருகிய இரவுதன்னில்
நேரென முடவன்றன்னை நீடியே தொட்டதாலே
பாரெனப் போறவேலை பலித்திட நாள தாகும்
கூரென வழக்கு முண்டு கோதைய ராலேதுன்பம்.

இ-ள். செவ்வாய்க்கிழமை இரவு சனியைத் தொட்டதால் போகின்ற வேலை பலிதமாக நாள் செல்லும், வழக்கு நேரும் ஸ்திரீயினால் துன்பமுண்டு எ-று. 50

### இராகுவைத் தொட்ட பலன்

துன்பமாம் சேயின்வாரம் தோன்றிய இரவு தன்னில்
வன்பதர் யிராகுதனை வரியவே தொட்டாலே
இன்பமு மொன்றுமில்லை யெண்ணிய கருமமாகா
நம்பிய வொருவனாலே நஷ்டமு மாகுங்காணே.

இ-ள். செவ்வாய்க்கிழமை இரவு இராகுவைத் தொட்டதால் இன்பமாக வெண்ணிய காரிய முடியாது, நீ நம்பிய வொருவனால் நஷ்டமாகும். எ-று. 51

### கேதுவைத் தொட்ட பலன்

காணவே சேயின்வாரம் கங்குலா மதனிற்றோன்றும்
நாணவே கேதுதன்னை நண்ணியே தொட்டதாலே
பூணவே யொருவராலே பொல்லாங்காய்ப்பொருளும் [போச்சு
தோணவே யதுவொருக்கால் தோன்றிடா தென்று [பேசே

இ-ள். செவ்வாய்க்கிழமை இரவு கேதுவைத் தொட்டதால் ஒருவரால் பொல்லாங்கானது உண்டாகி அதனால் பொருள் சேதமாகிப் போனதுண்டு, அந்தப் பொருள் ஒருகாலுந் திரும்பாது. 52

### சூரியனைத் தொட்ட பலன்

பேசிய சேயின்வாரம் பெருகிய யிரவுதன்னில்
நேசமாய் கதிரோன்றன்னை நீடிடத் தொட்டதாலே
வாசமாம் வழக்கினாலே வரும்பொருள் சேதமாகும்
நேசமாம் வெளியூர்போக வருமென வருந்திடாயே.

இ-ள். செவ்வாய்க்கிழமை இரவு சூரியனைத் தொட்டதால் வழக்கினால் பொருள் சேதமாகும், வெளியூர்க்குப் போகும்படியான பிரயாணங் கூடும். எ-று. 53

### சந்திரனைத் தொட்ட பலன்

அரியவே சேயின்வாரம் அடுத்திடு மிரவுதன்னில்
பிரியமாய் சந்திரன்றன்னைப் பொட்புடன் தொட்டதாலே
உரியது தப்பிடாமல் கூடிடும் நினைத்தவேலை
தெரியவே வியாபாரத்தில் திகழுறும் லாபந்தானே.

இ-ள். செவ்வாய்க்கிழமை இரவு சந்திரனைத் தொட்டதால் மனதில் நினைத்தவேலைமுடியும், செய்யும்படியான வியாபாரத்தில் லாபமுண்டாகும். எ-று. 54

## புதன் கிழமை பகல் சக்கரம்

| | | |
|---|---|---|
| ௫ புதன் | ௬ வியாழன் | ௧ சுக்கிரன் |
| ௭ சனி | ௮ இராகு | ௯ கேது |
| ௧ சூரியன் | ௨ சந்திரன் | ௩ செவ்வா |

### புதனைத் தொட்ட பலன்

புகழும் புந்திவாரம் புந்தியைத் தொட்டதாலே
மகிழுறு முத்தியோகம் மறையவ ருதவியாகும்
திகழுறு நினைத்தவேலை திட்டென வசமதாகும்
அகமதில் கன்னியற்கு அன்புடன் மணங்களாமே.

இ-ள். புதன்கிழமை பகல் புதனைத் தொட்டதாலே உத்தியோகம் விருத்தியாகும், பிராமணர்கள் உதவியுண்டு-நினைத்த வேலை கூடிய சீக்கிரத்தில்முடியும், மனையில் கன்னியற்கு கலியாணமாகும். 55

### வியாழனைத் தொட்ட பலன்

மணமெனப் புந்திவாரம் மறையோனைத் தொட்டதாலே
குணமுடன் மனையாள்தானுங் கொப்பெனப் பெறுவாள் [பிள்ளை
பணமுடன் பாக்கியங்கள் பரிவுடன் வந்துசேரும்
கணமென நினைத்தவேலை கடுகென வாகுஞ்சித்தி.

இ-ள். புதன்கிழமை பகல் வியாழனைத் தொட்டதால் மனையாள் ஆண்பிள்ளையைப் பெறுவாள், பணம் பாக்கியம் வந்து சேரும். மனதில் கோரிய நினைத்தவேலை கூடிய சீக்கிரம் முடியும். எ-று. 56

### சுக்கிரனைத் தொட்ட பலன்

சித்தியாம் புந்திவாரம் சுக்கிரனைத் தொட்டதாலே
பத்தியாய் நினைத்தவெண்ணம் பார்மன்ன ராலேதிரும்
சுத்தமாம் பிணியுந்தீரும் சுகமுடன் மணமுமாகும்
நத்திய வொருவராலே நன்மையுண் டாகுமென்னே.

இ-ள், புதன்கிழமை பகல் சுக்கிரனைத் தொட்டதால் மனதில் நினைத்த எண்ணம் அரசர்களால் அனுகூலமாகும். பிணியானது தீரும், கலியாணமாகும், ஒருவனால் நன்மையும் மேன்மையு முண்டாகும் எ-று,

### சனியைத் தொட்ட பலன்

என்னவே புந்திவாரம் சுன்னதைத் தொட்டதாலே
மன்னிய வழக்கினாலே மனத்துய ரதிகமாகும்
வின்னமாய்ப் பழியுந்தானும் விளைந்திடு மொருவனாலே
பன்னிய வழக்குநேரும் பதிதனை விட்டுவோட்டும்.

இ:ள். புதன்கிழமை பகல் சனியைத் தொட்டதால் வழக்கினால் மனத்துயரமாகும், பழிநேரும், ஒருவனால் வழக்கு நேர்ந்து பதியை விட்டு வோட்டும் எ-று. 58

### இராகுவைத் தொட்ட பலன்

ஓட்டவே புந்திவாரம் இராகுவைத் தொட்டதாலே
கூட்டியக் கள்ளராலே கொள்ளையும் போனசொத்து
நாட்டினில் காண்பதில்லை நலியினால் துயரமுண்டாம்
காட்டினி லலையச் செய்யுங் காரியம் பலித்திடாதே.

இ-ள், புதன்கிழமை இரவு இராகுவைத் தொட்டதால் கள்ளர்களால் கொள்ளைபோன பொருள் கிடைக்கமாட்டாது, நோயினால் துன்பமுண்டாகும், பயித்தியக்காரனைப்போல் காட்டில் அலையச் செய்யும், எந்தக் காரியமும் செய்யப் பலிதமிராது. எ-று. 59

### கேதுவைத் தொட்ட பலன்

பலித்திடாப் புந்திவாரம் பணிகேதைத் தொட்டதாலே
சலித்திடத் துயரமுண்டாஞ் சகல காரியமுந்தீதாம்
நலித்திடக் கன்னியாலே நாளுமே பெருகுந்துன்பம் [னே
தொலைத்திட வெளியூர்போகத் தோன்றிடுமெண்ணந்தா

இ-ள், புதன்கிழமை பகல் கேதுவைத் தொட்டதால் துயரப்படுகிறாய் செய்யும்படியான சகல காரியங்களிலும் நஷ்டமாகுவதுமன்றி ஒரு கன்னியினால் பெருந்துன்பப்படுகிறாய்' வெளியூர்போக எண்ணங்கொள்கிறாய், போனாலும் சுகமில்லை எ-று 60

### சூரியனைத் தொட்ட பலன்

தானெனப் புந்திவாரம் கதிரோனைத் தொட்டதாலே
ஊனெனப் பிணியுமுண்டா மொருதொழில் பலித்திடாது
நானென யெதைச்செய்தாலும் நஷ்டமே யதிகமாகும்
கானெனத் திங்களொன்று கழியப்பின் சுகமுண்டாமே.

இ-ள். புதன்கிழமை பகல் சூரியனைத்தொட்டதால் பிணி யினால் பாதையுண்டு, யாதொரு காரியமும் பலியாது, மீறி எதைச் செய்தாலும் நஷ்டமாகும், இவைகளெல்லாம் ஒரு மாதங்கழிய சுகமாகும் எ-று, 61

### சந்திரனைத் தொட்ட பலன்

சுகம்பெறப் புந்திவாரம் சந்திரனைத் தொட்டதாலே
மகவுடதோஷநீங்கும் மாதர்க்கு நன்மையாகுந்
தகைமையாய் நினைத்தவேலை தடையிலா முடிவதாகும்
உகமையாய் குறித்த திக்கை யுற்றுற நன்மையாகும்.

இ-ள், புதன்கிழமை சந்திரனைத்தொட்டதால் மகவுதோஷம் நீங்கும், மாதர்க்கும் நன்மையுண்டாகும், நினைத்தவேலை தடை யில்லாமல் முடியும். உகமையாகத்தானே குறித்த திக்கில் ஏக நன்மையுண்டாம் எ-று. 62

### செவ்வாயைத் தொட்ட பலன்

ஆகவே புந்திவாரம் ஆரலைத் தொட்டதாலே
தாகமாய் நாற்கால்ஜீவன் திகைதப்பிப் போனதுண்டு
ஏகவே போனஜீவன் யினிக்காண்ப தரியதாகும்
சோகமா யலைவதாலே சுகமில்லை யென்றுபேசே.

இ-ள். புதன்கிழமை பகல் செவ்வாயைத்தொட்டதால் ஒரு நாற்கால் ஜிவன் திசைதப்பிப் போனதுண்டு. அதை இனி கண் ணில் காண்பது அரிதாகும், பிரயாசைகொண்டு தேடிப் பார்ப்ப தில் பலனில்லை எ-று. 63

## புதன்கிழமை இரவு சக்கரம்

| | | |
|---|---|---|
| ௪ புதன் | ௫ வியாழன் | ௬ சுக்கிரன் |
| ௭ சனி | ௮ இராகு | ௯ கேது |
| ௧ சூரியன் | ௨ சந்திரன் | ௩ செவ்வா |

### புதனைத் தொட்ட பலன்

பேசிய மாலின்வாரம் பெருகிய இரவுதன்னில்
வாசமாய் புதனைத்தானும் வளம்பெறத் தொட்டதாலே
நேசமாம் வித்தையோங்கும் நினைத்தவை பலிதமாகும்
பாசமாய் மேற்கிருந்து பட்சமாய் சேதிகாண்பாய்.

இ-ள். புதன்கிழமை இரவு புதனைத் தொட்டதால் வித்தையானது பலிதமாகும், நினைத்தவை முடியும். மேற்கு திக்கிலிருந்து நன்மையாகிய சேதிவரும், அதனால் சந்தோஷமாகும் எ-று. 64

### வியாழனைத் தொட்ட பலன்

காணவே மாலின்வாரம் கங்குலா மிரவுதன்னில்
பூணவே வியாழன் றன்னைப் புகழுடன் தொட்டதாலே
வேணவே நினைத்தவேலை விரைவினில் முடிவதாகும்
தோணவே பிரயாணந்தன்னில் துலங்கிடு லாபந்தானும்.

இ-ள். புதன்கிழமை இரவு வியாழனைத் தொட்டதால் நினைத்த வேலை துரிதமாக முடியும், போகும்படியான பிரயாணத்தில் விசேஷமாகிய லாபங் கிடைக்கும். எ-று. 65

### சுக்கிரனைத் தொட்ட பலன்

தானென மாலின்வாரம் தக்கதோ ரிரவுதன்னில்
நானென சுக்கிரன் றன்னை நண்ணியே தொட்டதாலே
கோனெனப் போனசொத்து கொப்பென வந்துசேரும்
மானென வழக்குவெல்லு மங்கைய ருறவுமாமே.

இ-ள். புதன்கிழமை இரவு சுக்கிரனைத் தொட்டதால் கைவிட்டுப்போன சொத்து வந்து சேரும், வழக்கானது வெல்லும், ஸ்திரீகள் உறவாவார் எ-று. 66

### சனியைத் தொட்ட பலன்

உறவென மாலின்வாரம் உற்றதோ ரிரவுதன்னில்
கரியெனு முடவன்றென்னைக் கருதியே தொட்டதாலே
பிரிவென சிறையுமுண்டாம் பேசிய கருமமாகா
தறிவென மனிதர் தன்னால் தான்பய மிகவுண்டாமே.

இ-ள் புதன்கிழமை இரவு சனியைத் தொட்டதால் சிறைபடச் செய்யும், நினைத்த காரியமாகாது, ஒரு மனிதனால் பயமுண்டாகும். எ-று. 67

### இராகுவைத் தொட்ட பலன்

ஆமென மாலின்வாரம் அடுத்ததோ ரிரவுதன்னில்
தாமென ராகுதன்னைத் தானங்கு தொட்டதாலே
நாமெனப் பேசினுலே நண்ணிய துன்பமுண்டு
காமெனக் களவுமுண்டு கடிவிஷ பயமும்நேரும்.

இ-ள், புதன்கிழமை இரவு இராகுவைத் தொட்டதால் பேயினல் ஒரு துன்பமுண்டு, களவினுல் ஒரு துன்பமுண்டு, விஷத்தினுல் பயமு முண்டாம் எ-று. 68

### கேதுவைத் தொட்ட பலன்

நேரவே மாலின்வாரம் நேர்ந்திடு மிரவுதன்னில்
கோரவே கேது தன்னைக் குறிப்புடன் தொட்டதாலே
சேரவே கன்னியாலே சிந்தனை கலகமொன்று
கூரவே பொருளுஞ் சேதம் கொப்பென வாகும்பாரே.

இ-ள். புதன்கிழமை இரவு கேதுவைத் தொட்டதால் ஒரு கன்னியால் கவலைப்படுகிருய். அதனுல் பொருள் சேதமாகி வாடு -இருய் எ-று, 69

### சூரியனைத் தொட்ட பலன்

வாகன மாலின்வாரம் வருமிர வதனிலே தான்
பாகனப் பரிதிதன்னைப் பண்புடன் தொட்டதாலே
சோகனப் பிணியுந்தீரும் சொல்மொழி பலிதமாகும்
தரகன நினைத்ததெல்லாந் தடையிலா தாகும்பாரே.

இ-ள். புதன்கிழமை இரவு சூரியனைத் தொட்டதால் சோக மாகிய பிணியுந்திரும், சொல்லும்படியான மொழி பலிதமாகும் நினைத்தகாரியம் தடையில்லாமல் பலிக்கும் எ-று. 70

### சுக்கிரனைத் தொட்ட பலன்

பார்க்கவே மாலின்வாரம் பரிகிய இரவுதன்னில்
ஏர்க்கவே சந்திரன்றன்னை எழிலுடன் தொட்டதாலே
தீர்க்கவே வெளியிலிருந்து சேதியும் வருகும் நன்மை
பூர்க்கவே புகழுமுண்டாம் பொல்லாங்குந் தொலைந்து [போமே.

இ-ள். புதன்கிழமை இரவு சந்திரனைத் தொட்டதால் வெளி யூரிலிருந்து நன்மையான சேதிவரும், புகழுண்டாகும், பொல் லாங்கு தொலைந்து போகும் எ-று. 71

### செவ்வாயைத் தொட்ட பலன்

போகவே மாலின்வாரம் பொல்லாத இரவுதன்னில்
தாகவே செவ்வாய்தன்னைத் தானுமே தொட்டதாலே

ஆகவே குடும்பந்தன்னில் அனேகமாங் கலகமுண்டு
ஏகவே யுத்தியோகத்தில் இயம்பொணு துயரங்காட்டும்.

இ-ள். புதன்கிழமை இரவு செவ்வாயைத் தொட்டதால் குடும்பத்தில் அநேக கலகமுண்டு. அத்துடன் தான் செய்யும் படியான உத்தியோகத்திலும் சொல்ல முடியாத துயரங் காட்டும். எ-று. 72

## வியாழக்கிழமை பகல் சக்கரம்

| | | |
|---|---|---|
| ௫ வியாழன் | ௬ சுக்கிரன் | ௭ சனி |
| ௮ இராகு | ௯ கேது | ௧ சூரியன் |
| ௨ சந்திரன் | ௩ செவ்வா | ௪ புதன் |

### வியாழனைத் தொட்ட பலன்

காட்டவே கனகன்வாரம் கனகனைத் தொட்டதாலே
நாட்டினில் மழையுமுண்டு நற்பயிர் விளைவுமுண்டு
கூட்டமா முறவுமுண்டு கோரிய கருமமாகும்
தேட்டமாய் மனையில்தானுந் திகழ்கலி யாணமாமே.

இ-ள், வியாழக்கிழமை பகல் வியாழனைத் தொட்டதால் மழையுண்டு. விளைவுண்டு, உறவு கூடும், நினைத்த காரியமாகும், மனையில் கலியாணம் நடக்கும் எ-று. 73

### சுக்கிரனைத் தொட்ட பலன்

ஆமென கனகன்வாரம் வெள்ளியைத் தொட்டதாலே
தாமெனப் போனார்மீள்வர் தக்கதோ ருதவிசேரும்
போமெனப் பிரயாணந்தான் போகவும் நன்மையாகும்
நாமென எதைச் செய்தாலும் நஷ்டமே தோன்றிடாதே

இ-ள். வியாழக்கிழமை பகல் சுக்கிரனைத் தொட்டதால் தூரதேசம் போனவர் மீண்டும் வருவார்கள், தக்க உதவியானது

சேரும் பிரயாணம் போக நன்மையாகும், எந்தக் காரியத்தைச் செய்யினும் நஷ்டமிராது எ-று.

சனியனைத் தொட்ட பலன்

ஆதெனக் கனகன்வாரம் முடவனைத் தொட்டதாலே
போதெனப் போனர்மீளார் பொருளது சேதமுண்டு
தீதெனப் பகையுமுண்டு தேங்கிடுங் கவலையுண்டு
தோதென நினைத்தவேலை தோஷமா மென்று செப்பே

இ-ள். வியாழக்கிழமையில் சனியைத் தொட்டால் துலை தூரம் போனவர்கள் மீண்டு வரமாட்டார்கள், பொருள் சேதமாகும். பகை நேரும்! அதினால் கவலைப்படுகிறாய், நினைத்த காரியமும் முடியாது எ-று. 75

இராகுவைத் தொட்ட பலன்

செப்பவே கனகன்வாரம் இராகுவைக் தொட்டதாலே
தப்பிதமாகச் செய்த தொழிலினால் கலகமுண்டு
கொப்பெனச் செய்துவந்த கூட்டுவியா பாரந்தன்னால்
மெப்புறக் கலகமாகி மனமது வாடுகின்றாய்.

இ-ள். வியாழக்கிழமை பகல் இராகுவைத் தொட்டால் நீ தப்பிதமாகச் செய்த தொழில் முகாந்தரத்தினால் கலகமாகி மனம் வாடுகின்றாய் எ-று, 76

கேதுவைத் தொட்ட பலன்

வாடவே கனகன்வாரம் வருங்கேதைக் தொட்டதாலே
கூடவே துலைவிருந்து கொடுமையாய்ச் சேதிகாண்பாய்
தேடவே போன சொத்து தான்வசப் பட்டிடாது
நீடவே யனைவருக்கும் நிந்தைவா னுகச்செய்யும்.

இ-ள், வியாழக்கிழமை பகல் கேதுவைத் தொட்டால் துலைவிலிருந்து கொடுமையாகிய சேதி காண்பாய். இப்போது தேடியலையுமபடியான சொத்து வசப்படாது, நீ யாவருக்கும் நிந்தை யுள்ளவனாகுவாய் எ-று, 77

சூரியனைத் தொட்ட பலன்

செய்யவே கனகன்வாரம் சூரியனைத் தொட்டதாலே
அய்யமா மலைச்சல்பட்டு அகமது வாடுகின்றாய்
துய்யவே யுத்தியோகத்தில் துயரமு மதிகமாகும்
பையவே இவைகள் தீர பட்சமொன் றேகநன்றே

இ-ள். வியாழக்கிழமை பகல் சூரியனைத் தொட்டால் அலைச்சற்படுகிறாய், மனம் வாடுகின்றாய், உத்தியோகத்தில் துயரம் அதிகமாகும், இவைகள் யாவுந் தீர்ந்து சுகப்பட பக்ஷமொன்று கழிய நன்று எ-று. 78

### சந்திரனைத் தொட்ட பலன்

நன்றெனக் கனகன்வாரம் சந்திரனைத் தொட்டதாலே
சென்றவர் வந்து சேர்வர் சித்தியாம் நினைத்தவேலை
கன்றுடன் காலிகொள்ள காட்சியாம் நன்மையாகும்
மன்றுமா கீர்த்தியோங்கி மகிழ்வுடன் வாழ்வுண்டாமே.

இ-ள். வியாழக்கிழமை பகல் சந்திரனைத் தொட்டதால் சென்றவர் வந்து சேர்வர் நினைத்த வேலை சித்தியாகும், கன்று காலி கொள்ள நன்மையோடு வாழ்வுண்டாகும் எ-று. 79

### செவ்வாயைத் தொட்ட பலன்

ஆமெனக் கனகன்வாரம் ஆறலைத் தொட்டதாலே
தாமெனச் சோதராலே தானொரு வழக்குமுண்டு
போமெனப் பூமிபோகும் பொருளது சேதமாகும்
நாமென நினைத்தவேலை நன்றாக முடிந்திடாதே.

இ-ள்- வியாழக்கிழமை பகல் செவ்வாயைத் தொட்டதால் சகோதரர்களால் கலகமுண்டு, அதனால் பூமி போகும், பொருள் நஷ்டமாகும், எந்தக் காரியம் முயன்று செய்தாலும் நஷ்டம் வரும் எ-று, 80

### புதனைத் தொட்ட பலன்

ஆதெனக் கனகன்வாரம் அரும்புதனைத் தொட்டதாலே
போதென நினைத்த வேலை புகழுடன் வெற்றியாகும்
ஏதென மணையுங் கொள்ள எழிலுடன் நன்மையாகும்
தோதெனப் பெரியோர் நல்ல துணையது கூடும் பாரே

இ-ள். வியாழக்கிழமை பகல் புதனைத் தொட்டதால் நினைத்த வேலை சித்தியாகும், மணைக்கொள்ள நண்மையுண்டாகும், பெரியோர்கள் உதவியாவர் எ-று. 81

## வியாழக்கிழமை இரவு சக்கரம்

| | | |
|---|---|---|
| ௬ வியாழன் | ௫ சுக்ரொன் | ௭ சனி |
| ௮ இராகு | ௯ கேது | ௧ சூரியன் |
| ௨ சந்திரன் | ௩ செவ்வா | ௪ புதன் |

### வியாழனைத் தொட்ட பலன்

பாரெனப் பொன்னேன்வாரம் பரவிய இரவு தன்னில்
சீரெனப் பொன்னேன் தன்னைச் சிறப்புடன் தொட்டதா
நேரெனப் புத்திருண்டாம்நீடிடும் மனையாள்செல்வம்[லே
கோரென வாசராலே குலவிடும் கீர்த்திதாமும்.

இ-ள். வியாழக்கிழமை இரவு வியாழனைத் தொட்டதால் சந்ததி உண்டாகும், மனையில் செல்வமானது நீடும், அரசர்களால் கீர்த்தி பெருகும். எ-று. 82

### சுக்கிரனைத் தொட்ட பலன்

தாமெனப் பொன்னேன்வாரம் தங்கிய இரவுதன்னில்
காமெனச் சுக்கிரன் றன்னைக் காட்சியாய்த் தொட்டதா
நாமென நினைத்தவேலை நடந்திடுந் தடையிராது [லே
போமெனப் போன சொத்தும் புகழுடன் வந்து சேரும்.

இ-ள். வியாழக்கிழமை இரவு சுக்கிரனைத் தொட்டதால் நினைத்த வேலை தடையில்லாமல் முடியும். கைவிட்டுப் போன சொத்து வந்து சேரும். எ-று. 83

### சனியைத் தொட்ட பலன்

சேரவே பொன்னேன் வாரம் செப்பிய இரவுதன்னில்
காரியைத் தொட்டதாலே கஷ்டமு மதிகமாகும்
கோரிய வழக்குத்தானும் குணப்பட நன்மையாகா
சீரிய பகைவராலே சித்தமும் வாடச்செய்யும்.

இ-ள். வியாழக்கிழமை இரவு சனியைத் தொட்டதால் கஷ்ட மதிகமாகும். கோரியவழக்கு நன்மையாகாது, பகைவர்களாலே சிந்தை வாடச்செய்யும் எ-று. 84

### இராகுவைத் தொட்ட பலன்

செய்யவே பொன்னின் வாரம் சீரிய இரவு தன்னில்
துய்யவே ராகுதன்னைத் தொட்டதோர் தோஷத்தாலே
நையவே மனையில் கஷ்டம் நண்ணிய கருமமாகா
பையவே தொழிலுமற்றும் பரதவித் தலைவனென்னே

இ-ள். வியாழக்கிழமை இரவு இராகுவைத் தொட்டதால் மனையில் நஷ்டமுண்டு, நினைத்த காரியம் தடையாகும், தொழிலு மில்லாமல் துமரப்படுவன் எ-று. 85

### கேதுவைத் தொட்ட பலன்

என்னவே பொன்னேன்வார மிருளெனு மிரவுதன்னில்
பன்னியே கேதுதன்னைப் பரிவுடன் தொட்டதாலே

மன்னிய துயரமோடு மங்கையர் பிணியுமுண்டு
உன்னிய நினைத்தவேலை யொருகாலும் பலித்திடாதே

இ-ள். வியாழக்கிழமை இரவு கேதுவைத் தொட்டதால் துயரபபடுவதுடன் ஸ்திரீயின் வியாதியுண்டு, இப்போது நினைத்திருக்கும் வேலை முடியாது, எ-று. 86

சூரியனைத் தொட்ட பலன்

திடமெனப் பொன்னேன்வாரம் தீண்டிடு மிரவுதன்னில்
அடவுடன் கதிரோன் றன்னை அன்புடன் தொட்டதாலே
கடமெனப் பிணியுந் தீரும் கருதிய கருமமாகும்
மடமயில் பெண்ணினலே மனமது தான்களிக்கும்.

இ-ள். வியாழக்கிழமை இரவு சூரியனைத் தொட்டதால் பிணியானது திரும், நினைத்த காரியமாகும், ஸ்திரீயினல் மன மகிழ்ச்சி யுண்டாகும். எ-று. 87

சந்திரனைத் தொட்ட பலன்

களிக்கவே போன்னேன்வாரம் காணுமோ ரிரவுதன்னில்
செழிக்கவே சந்திரன் றன்னைச் சிறப்புடன் தொட்டதா
தழைக்கவே மனையும்வாழ்க தானது விருத்தியாகும் [லே
குறித்திட நினைத்த வேலை கூடியே வருகும்பாரே

இ-ள். வியாழக்கிழமை இரவு சந்திரனைத் தொட்டதால் மணக்கொள்ள நன்மையாகும், நினைத்த வேலை கைகூடிவரும் எ-று. 88

செவ்வாயைத் தொட்ட பலன்

வருகவே பொன்னேன்வாரம் வழித்திடு மிரவுதன்னில்
குருகவே செவ்வாய்தன்னைக் கொப்பெனத் தொட்டதா
மருவிய கருமமாகா மனையதில் துயரமுண்டு [லே
பெருகிய நோயினலே பேசிடும் வாதையன்றே.

இ-ள். வியாழக்கிழமை இரவு புதனைத் தொட்டதால் நினைத்த காரியமாகாது. மனையில் துயரம் விளையும், தேகத்தில் வாய்த்த நோயினல் பாதையுண்டாம எ-று. 89

புதனைத் தொட்ட பலன்

அன்றெனப் பொன்னேன்வார மியம்பிடு மிரவுதன்னில்
நன்றெனப் புந்திதன்னை நாடியே தொட்டதாலே [டாம்
கன்றுடன் காலிகொள்ள கனத்ததோர் பாக்கியமுண்
வென்றிட வெற்றியுண்டாம் வேணதோ ருதவியுண்டாம்.

இ-ள். வியாழக்கிழமை இரவு புதனைத்தொட்டதால் கன்று காலிகொள்ள நன்று, பாக்கியம் பெருகும், எதிரிகளை ஜெயிப்பாய் பெரியோ ருதவியுண்டு எ-று. 90

## வெள்ளிக்கிழமை பகல் சக்கரம்

| | | |
|---|---|---|
| ௬ சுக்கிரன் | ௭ சனி | ௮ இராகு |
| ௫ கேது | ௧ சூரியன் | ௨ சந்திரன் |
| ௩ செவ்வா | ௪ புதன் | ௯ வியாழன். |

சந்திரனைத் தொட்ட பலன்

உண்டெனப் புகர்வாரத்தில் புகர்தனைத் தொட்டதாலே
பண்டென நினைத்தவேலை பரிவுடன் சித்தியாகும்
கண்டிட மனையிற்றானும் கலியாண மிகநடக்கும் [ரே
கொண்டதோர் பெண்ணினாலேகுடும்பமும் தழைக்கும்பா

இ-ள். வெள்ளிக்கிழமை பகல் சுக்கிரனைத் தொட்டதால் வேலை சித்தியாகும், மனையில் கலியாணங் கூடும், கொள்ளும் பெண்ணினால் குடும்பந் தழைக்கும் எ-று. 91

சனியைத் தொட்ட பலன்

பாரெனக் கதிர்வாரத்தில் காரியைத் தொட்டதாலே
சீரெனப் போனஜீவன் சிறப்புடன் வருவதில்லை
கூறென வொருவராலே கொடுமையும் நேர்ந்ததுண்டு
நேரென வதினால்மெத்த நஷ்டமு மாகும்வாறே

இ-ள். வெள்ளிக்கிழமை பகல் சனியைத் தொட்டதால் போன ஜீவன் திரும்பிவரப் பிரயாசையாகும், ஒருவனால் கொடுமைவிளையும், அதனால் நஷ்டமுண்டு எ-று, 92

இராகுவைத் தொட்ட பலன்

வாறெனப் புகர்வாரத்தில் ராகுவைத் தொட்டதாலே
காறெனக் கலகந்தன்னால் கைப்பொருள் விரைய மாச்சு
நேறெனத் தொழிலில்தானும் நிந்தையும் பகையுமாச்சு
கூறெனத் தொட்டவிந்தக் குறியது தப்பாதப்பா.

இ-ள். வெள்ளிக்கிழமை பகல் இராகுவைத் தொட்டதால் கலகத்தினால் கைப்பொருள் விரையமாகப் போனதுண்டு, தொழில் முகாந்திரத்தில் நிந்தையான பகையுமாச்சு, இந்தக்குறி தப்பாது. எ-று. 93

### கேதுவைத் தொட்ட பலன்

தப்பாமல் புகர்வாரத்தில் தான்கேதைத் தொட்டதாலே
செப்பமா யொருவன் தன்னைச் சிந்தையில் நினைத்தாய்நீ
ஒப்பிலா வவன் தன்னாலே உள்ளதோர்பகையுநேரும்[யும்
கொப்பென வவனைநீக்கிகுறித்ததோர் தொழிலை செய்யே

இ-ள். வெள்ளிக்கிழமை பகல் கேதுவைத் தொட்டதால் ஒருவனை நம்பியிருக்கிறாய், அவனால் கலகம் நேரும், அவனை நீக்கிச் செய்ய நன்மையாகும் எ-று. 94

### சூரியனைத் தொட்ட பலன்

செய்யவே புகரின்வாரம் செங்கதிர்தனைத் தொட்டதாலே
பையவே நினைத்தவேலை பலித்திட நாளதாகும்
உய்யவே பித்தரோக முடலினில் கொண்டுவாட்டும்
துய்யவே பரதேசங்கள் துரிதமாய்ப் போகவைக்கும்.

இ-ள். வெள்ளிக்கிழமை, சூரியனைத் தொட்டதால் நினைத்த காரியம் பலிக்க நாள் செல்லும், பித்தரோகத்தால் பாதையுண்டு பரதேசம் போகவைக்கும் எ-று. 95

### சுக்கிரனைத் தொட்ட பலன்

வைக்கவே புகரின்வாரம் வம்புலித் தொட்டதாலே
மிக்கவே நன்மையுண்டு மேன்மையாம் நினைத்தவேலை
தக்கதோர் பூமிகொள்ளத் தானியம் பலிதமாகும்
நிக்கவே வழக்குவெல்லும் நிந்தையு மில்லைபாரே.

இ-ள். வெள்ளிக்கிழமை சுக்கிரனைத் தொட்டதால் நன்மையுண்டாகும், நினைத்தகாரியம் மேன்மையாக நடக்கும், பூமியானது கொள்ள தானியம் பலிதமாகும், வழக்குத் திரும், நிந்தனைவராது. எ-று. 96

### செவ்வாயைத் தொட்ட பலன்

பாரெனப் புகரின்வாரம் ஆரலைத் தொட்டதாலே
நேரெனக் கன்னியாலே நிந்தையுண் டானதுண்டு
சீரென வதினால்மெத்த சிந்தனைப் படுகிறாய் நீ
காரென வருடமொன்று கழியவே சுகமுமுண்டே

இ-ள். வெள்ளிக்கிழமை செவ்வாயைத் தொட்டதால் உனக்கு ஒரு கன்னியால் நிந்தையான வார்த்தை யுண்டானதுண்டு. அதனால் சிந்தை வாடுகிறாய், இன்னும் ஒரு வருஷம் கழிய சுகமுண்டாகும் எ-று. 97

### புதனைத் தொட்ட பலன்

உண்டென புகர் வாரத்தில் புந்தியைத் தொட்டதாலே
கண்டதோர் கனவினாலே கவலையும் படுகிறாய் நீ

தெண்டனை யொன்றுமில்லை தேடிய பொருளுங்கிட்டும்
பண்டெனப் பழையநேசம் பாவைய ருறவுமாமே.

இ-ள், வெள்ளிக்கிழமை புதனைத் தொட்டால் நீ ஓர் கனவு கண்டு அதனால் மனம் வாடுகின்றாய், அதனால் ஒரு குற்றமுமில்லை, தேடிபபோகும் பொருள் கிடைக்கும்; பழைய சினேகங் கூடும். ஸ்திரியும் உறவாவள் எ-று. 98

வியாழனைத் தொட்ட பலன்

உறவெனப் புகர்வாரத்தில் குருவையுந் தொட்டதாலே
புறவெனப் புத்திருண்டு பற்றிய பிணியுந்தீரும்
துறவெனத் தூரப்போனர் துரிதமாய் வந்துசேர்வர்
குறைவிலா நினைத்தவேலை கொப்பெனப் பலிதமாமே

இ-ள். வெள்ளிக்கிழமை வியாழனைத் தொட்டால் புத்திர விருத்தியுண்டு, தேகத்தில் தோன்றிய பிணிதீரும்! தொலைதூரம் போனவர் வந்து சேர்வார்கள், நினைத்த காரியம் குறைவில்லாமல் முடியும் எ-று. 99

வெள்ளிக்கிழமை இரவிற்கும் மேற்கூறிய பலன்களையே
சொல்லவேண்டும்.

## சனிக்கிழமை பகல் சக்கரம்

| | | |
|---|---|---|
| எ<br>சனி | அ<br>இராகு | க<br>கேது |
| ௬<br>சூரியன் | உ<br>சந்திரன் | ௩<br>செவ்வா |
| ௫<br>புதன் | ௯<br>வியாழன் | ௪<br>சுக்கிரன் |

சனியைத் தொட்ட பலன்

ஆமென சனிவாரத்தில் அடர்சனிதனைத் தொட்டாலே
தாமென நினைத்தவேலை தடைப்பட்டு பின்னலாகும்.
நாமென துணிந்து செய்யும் நற்றொழில் பலிதமாகும்
போமெனப் போனசொத்தும் புகழுடன் வந்து சேரும்.

இ-ள். சனிக்கிழமை சனியைத் தொட்டால் நினைத்தவேலை தடைப்பட்டு பின்னால் கைகூடும், துணிந்து செய்யும்படியான

தொழில் பலிதமாகும், போன சொத்து திரும்பவும் வந்து சேரும் எ-று. 100

இராகுவைத் தொட்ட பலன்

சேரவே சனியின்வாரம் ராகுவைத் தொட்டதாலே
நேரவே பலவிதத்தும் நிந்தனை வந்து தீரும்
சீரவே சிறையுமீளும் செலவது மதிகமாகும்
தேரவே யொருவனாலே திடம்பெற வாகும் நன்மை

இ-ள். சனிக்கிழமை இராகுவைத் தொட்டதால் பலிதமான நிந்தனையான சொற்கள் வந்து தீரும், சிறையானது மீளும் செலவு அதிகமாகும், ஒரு மனிதனால் திடம் பெறத் தக்க நன்மையுண்டாகும் எ-று. 101

கேதுவைத் தொட்ட பலன்

நன்மையாஞ் சனிவாரத்தில் நாடியே கேதைத்தொட்டதால்
துன்மையும் வந்ததுண்டு தொலைந்திடும் சிலதுநாளில்
கன்மமாம் நினைத்தவேலை கைகூடு மொருவராலே
தன்மையாய்க் காளிக்கேநீ பூசை தான் செய்திடாயே.

இ-ள். சனிக்கிழமை கேதுவைத்தொட்டதால் உனக்குத் துன்மையானது வந்ததுண்டு, துலைந்திடும், இன்னும் சிலநாளில் நீ நினைத்த வேலை கைகூடும், காளிகாதேவிக்குப் பூசை செய்வாய் எ-று. 102

சூரியனைத் தொட்ட பலன்

ஆயவே சனிவாரத்தில் அலர்கதிர் தனைத்தொட்டதாலே
நேயமும் பிரிந்துபோகும் நிலையது விட்டுப்போக்கும்
தோயவே தோஷம்நேரும் தொல்லையால லைச்சலாகும்
காயவே யிவைகளெல்லாம் கடக்குமோர் வாரத்துள்ளே

இ-ள். சனிக்கிழமை சூரியனைத் தொட்டதால் பழைய நேசம் பிரிந்திருக்கிறாய், நிலைவிட்டு நிலை பெயர்ந்தாய், தோஷமாகிய தொல்லையால் அலைச்சல்படுகிறாய், இவைகள் இன்னும் ஒரு வாரத்திற்குள் நன்மைதரும் எ-று. 103

சந்திரனைத் தொட்ட பலன்

துள்ளதோர் சனிவாரத்தில் சந்திரனைத் தொட்டதாலே
வள்ளலின் கிருபையுண்டு வஞ்சிய ருறவுமாகும்
தெள்ளியப் பொருள் கைகூடுந்தேசமே போனார் மீள்வர்
உள்ளதோ ருறவுமாகும் ஊர்போக நன்மையாமே

இ-ள்- சனிக்கிழமை சந்திரனைத் தொட்டதால் தெய்வ சகாயமுண்டு, ஸ்திரீ யுறவாகும், பொருள் கிடைக்கும், வெளிதேசம் போனார் மீண்டு வருவார்கள், உறவு கூடும், ஊர்ப் பயணம் போக நன்மையாகும் எ-று. 104

### செவ்வாயைத் தொட்ட பலன்

ஆமென சனியின்வாரம் ஆரலைத் தொட்டதாலே
நாமென சகோதரத்தால் நலம்பெறக் கீர்த்தியுண்டாம்
தாமென வெருதுகொள்ள தழைத்திடுங் குடும்பமேலாய்
போமெனப் போனசொத்தும் புகழுடன் வந்து சேரும்

இ-ள். சனிக்கிழமை செவ்வாயைத் தொட்டதால் சகோதார்களாலே கீர்த்தியானது உண்டாகும். எருதுகொள்ள குடும்பந்தழைக்கும், போனபொருள் வந்து சேரும் எ-று. 105

### புதனைத் தொட்ட பலன்

வந்திட சனியின்வாரம் புந்தியைத் தொட்டதாலே
பந்தமாம் பழியும்போகும் பலித்திடும் நினைத்தவேலை
சிந்தையில் நினைத்தகன்னி சிறப்புடன் வந்து சேர்வள்
அந்தமா மனையிற்றனு மாகுமே கலியாணங்கள்.

இ-ள். சனிக்கிழமை புதனைத் தொட்டதால் பழியானது தொலையும், நினைத்தவேலை பலிதமாகும், மனதில் நாட்டங்கொண்ட பெண்ணே கிடைக்கும், மனையில் கலியாணமாகும், நன்மை யுண்டாம் எ-று. 106

### வியாழனைத் தொட்ட பலன்

கலியெனுஞ் சனிவாரத்தில் கனகனைத் தொட்டதாலே
நலியது தொலைந்துபோகும் நாட்டினில் மழையுமுண்டு
மலியவே நினைத்தவேலை மகிழுடன் பலிதமாகும்
தலைமையா முத்தியோகந் தானது வுயரும்பாரே

இ-ள். சனிக்கிழமை வியாழனைத் தொட்டதால் நலிவானது தொலையும் நாட்டில் மழையானது பொழியும், நினைத்தவேலை பலிதமாகும், உத்தியோகம் உயரும் எ-று. 107

### சுக்கிரனைத் தொட்ட பலன்

பாரென சனிவாரத்தில் பளிங்கோனைத் தொட்டதாலே
பேரெனப் புகழுமுண்டு பேசிய பெண்ணேகிட்டும்
நேரென வழக்குவெல்லும் நிலைதப்பி போனர் மீள்வர்
கோலமாம் மனையிற் செல்வம் குலவிடு மென்றுபேசே

இ-ள். சனிக்கிழமை சுக்கிரனைத் தொட்டதால் புகழுண்டாகும். பேசிய பெண் கிடைக்கும், வழக்கு வெல்லும், நிலைதவறிப் போனவர் மீண்டு வருவார், மனையில் செல்வமானது பெருகும் எ-று. 108

சனிக்கிழமை இரவிற்கும் மேற்கூறிய
பலனைக் கண்டு சொல்லவும்

நிமித்யகுறி சாஸ்திரம் முற்றிற்று.